ஸ்ரீ காமகோடி க்ரந்தாவலி : 61

# ॥ श्री त्रिपुरसुन्दरीस्तोत्रम् ॥

# ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ ஸ்தோத்ரம்

*ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய*
*ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான*
**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ**
**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**
*அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடன்*
*கூடியது*

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி ௴ 29௳
ஆனந்த ஹு



**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

श्रीः




श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छङ्करभगवत्पादप्रतिष्ठित-
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु श्रीपादैः क्रियते
नारायणस्मृतिः ॥

श्रीमूकपञ्चशती-मुकुन्दमाला-शिवपादादिकेशान्तवर्णनादीन् गरिष्ठान् ग्रन्थविशेषान् द्राविडचनुवादैः साकं प्रकाशयित्वा आस्तिकानां भक्तिभावमभिवर्धयद्भिः अस्मत्प्रियान्तेवासिभिः श्रीकामकोटिकोशस्थाननिर्वाहकैः अद्य श्रीभगवत्पादादिमहनीयैः सर्वजनोद्धारणार्थमनुगृहीताः भगवन्मूर्तिप्रभेदगुणवर्णनपटीयांसः भक्तिरससर्वस्वभूताः श्रीहनूमत्पञ्चरत्न-सुब्रह्मण्यभुजङ्गादिस्तोत्रतल्लजाः द्राविडचनुवादैः साकं प्रकाशयिष्यन्त इति विदित्वा परमां मुदं भजामः ।

आस्तिकाः एतानि स्तुतिरत्नानि सार्थानुसन्धानं पठन्तः शृण्वन्तश्च भगवद्भक्तिपरवशीकृतस्वान्ताः श्रीचन्द्रमौलीश्वरकृपापात्रीभूताः सकलभाग्यजातं प्राप्नुवन्त्वित्याशास्महे ।

| | |
|---|---|
| यात्रास्थानम्<br>इलैयात्तकुटी<br>शुभकृच्छ्रावणशुद्धप्रथमा | नारायणस्मृतिः । |

ஸ்ரீ:

முத்திரை

**ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய**
**ஸ்ரீமத் சங்கரபகவத்பாத ப்ரதிஷ்டித**
**ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு**
**ஸ்ரீபாதை: க்ரியதே நாராயண ஸ்ம்ருதி: ||**

ஸ்ரீ மூகபஞ்சசதீ - முகுந்தமாலா - சிவபாதாதி கேசாந்தவர்ணனம் முதலிய அரும்பெரும் நூல்களைத் தமிழுரையுடன் வெளியிட்டு ஆஸ்திகர்களின் பக்தி உணர்ச்சியை வளர்க்கும் நம் பிரிய சிஷ்யரான ஸ்ரீ காமகோடி கோசஸ்தான நிர்வாஹகர்கள், இப்பொழுது ஸ்ரீ பகவத்பாதர்கள் முதலிய பெரியோர்கள் அருளிய பக்திமயமான ஸ்தோத்திரங்களைத் தமிழுரையுடன் வெளியிடுவதை அறிந்து மிகவும் சந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திர ரத்தினங்களைப் பொருளறிந்து படித்தும் கேட்டும், பகவத் பக்தியில் திளைத்த உள்ளத்தினராய், ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரின் கிருபைக்குப் பாத்திரராகி, ஸகல பாக்கியங்களையும் பெறுவார்களாக.

யாத்ராஸ்தானம்
இளையாத்தகுடி
சுபக்ருத் ச்ராவண
சுத்தப்ரதமா

**நாராயண ஸ்ம்ருதி:**

॥ श्रीः ॥

# ॥ श्रीत्रिपुरसुन्दरीस्तोत्रम् ॥

# ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ ஸ்தோத்ரம்

कदम्बवनचारिणीं मुनिकदम्बकादम्बिनीं
नितम्बजितभूधरां सुरनितम्बिनीसेविताम् ।
नवाम्बुरुहलोचनाम् अभिनवाम्बुदश्यामलां
त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीमाश्रये ॥ १ ॥

கதம்பவநசாரிணீம் முநிகதம்பகாதம்பிநீம்
நிதம்பஜிதபூதராம் ஸுரநிதம்பிநீஸேவிதாம் ।
நவாம்புருஹலோசநாம் அபிநவாம்புதச்யாமலாம்
த்ரிலோசநகுடும்பிநீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே ॥ 1

**कदम्बवनचारिणीं** - கடம்ப வனத்தில் உலாவுகிற வளும், **मुनिकदम्बकादम्बिनीं** - மஹர்ஷிகள் கூட்டத்திற்கு மேகவரிசை போன்றவளும், **नितम्बजितभूधरां** - நிதம்பத் தால் மலையை வென்றவளும், **सुरनितम्बिनीसेवितां**- தேவ மாந்தர்களால் பணி செய்யப்படுகிறவளும், **नवाम्बुरुहलो-चनां** - புதிதாக மலர்ந்த தாமரைக்கு நிகரான கண் களோடு கூடியவளும், **अभिनवाम्बुदश्यामलां** - புதிதாகத் தோன்றுகிற மேகம்போல் கருநிறத்தவளும் (தாபத்தை அகற்றுபவளும்), **त्रिलोचन-कुटुम्बिनीं** - முக் கண்ணனது மனையாளுமான, **त्रिपुरसुन्दरीं**-த்ரிபுரஸுந் தரியை, **आश्रये** - சரணம் புகுகிறேன்.

கருத்து:—நீருண்ட கார்காலத்து மேகவரிசை போல, தியானிக்கும் ஜனங்களது தாபத்தை அகற்றிக் குளிரச் செய்பவளும், கடம்பவனத்தில் உலாவி நிற்பவளும், மலையை ஒத்த நிதம்பங்களும் தாமரையை ஒத்த நேத்திரங்களும் அமையப்பெற்றவளும், தேவ மாதர்களால் பணி செய்யப்பட்டவளும், முக்கண்ணனது குடும்பத்தை நடத்துபவளும், முப்புரமெரித்த சிவபெருமானது கோபத்தைத் தணித்த சுந்தரியுமான த்ரிபுர ஸுந்தரி தேவியைச் சரணமடைகிறேன்.

குறிப்பு:—சூரியன், சந்திரன், அக்கினி என்று மூன்று தேஜஸ்ஸையும் மூன்று கண்களாகக் கொண்ட ஸம்ஹார மூர்த்தியான ருத்திரரின் கோபம் அளவற்றது. அந்தத் தேவனோடு குடும்பம் நடத்துவதால் கோபத்தைத் தணிக்கும் தேவியின் சக்தியும், வசீகர சக்தியும் சிறப்பாகப் புலப்படுகின்றன. முக்கண்ணனாக இருந்து முப்புரமெரித்த தேவனையும் அழகுபடுத்துவதனால் தேவீ என்பது பொருள். கதம்பவனத்தில் ஸஞ்சரிக்கும் இயற்கை யுள்ளவள் முனி கதம்பத்தை அநுக்ரஹிப்பதும், நிதம்ப அழகு பெற்றவள் நிதம்பிநிகளால் ஸேவிக்கப்படுவதும் பொருத்தமே.

कदम्बवनवासिनीं कनकवल्लकीधारिणीं
महार्हमणिहारिणीं मुखसमुल्लसद्वारुणीम् ।
दयाविभवकारिणीं विशदलोचनीं चारिणीं
त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीमाश्रये ॥ २ ॥

கதம்பவநவாஸிநீம் கநகவல்லகீதாரிணீம்
மஹார்ஹமணிஹாரிணீம் முகஸமுல்லஸத்வாருணீம் ।
தயாவிபவகாரிணீம் விசதலோசநீம் சாரிணீம்
த்ரிலோசநகுடும்பிநீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே ॥ 2

कदम्बवनवासिनीं - கதம்ப வனத்தை வாஸஸ்தலமாகக் கொண்டவளும், कनकवल्लकीधारिणीं - ஸ்வர்ண யாழைக் கையிலேந்தியவளும், महार्हमणिहारिणीं - மதிப்பிற்கெட்டாத ரத்தினமாலை அணிந்தவளும், मुखसमुल्लसद्वारुणीं - வாயிலுள்ள மத்யமென்ற மாதக த்ரவ்யத்தால் ப்ரகாசிப்பவளும், दयाविभवकारिणीं - கருணை கூர்ந்து (பக்தர்களுக்கு) ஐச்வரியத்தை அளிப்பவளும் (அல்லது பக்தர்களிடத்து மிகுதியாகத் தயை காட்டுபவளும்), विशदलोचनीं - களங்கமற்ற கண்ணேக்கை யுடையவளும், (அல்லது நிர்மல ஞான வடிவாக இருப்பவளும்), चारिणीं - எங்கும் பரவி நிற்பவளும், त्रिलोचनकुटुम्बिनीं - சிவனுடைய மனைவியுமான, त्रिपुरसुन्दरीं - த்ரிபுரஸுந்தரியை, आश्रये - அண்டிநிற்கின்றேன்.

கருத்து:—கதம்ப வனத்தில் வசிப்பவளும், தங்கமயமான யாழை ஏந்தியவளும், விலையுயர்ந்த ரத்தின மாலை அணிந்தவளும், மாதக வஸ்துவை வாயில் கொண்டு விளங்குகிறவளும், தயை புரிந்து ஐச்வர்யமளிப்பவளும், மாசற்ற கடாக்ஷத்தால் எங்கும் ஸஞ்சரிப்பவளும், முக்கண்ணனின் குடும்பினியுமான த்ரிபுர ஸுந்தரி தேவியை யான் அடைக்கலமடைகிறேன்.

குறிப்பு:—பக்தர்களுக்குக் கருணைகூர்ந்து பிறவிக் கடலை அகற்றித் தெளிவான அறிவாகிய ஞானக் கண்ணைக் கொடுத்து த்ரிபுரஸுந்தரி அருள் புரிகிருள். भव என்பது பிறவிக் கடலாகிய சம்சாரத்தைக் குறிக்கும். वि என்பது அதன் இல்லாமையைக் காட்டும். विशदलोचनं ஞானக்கண். விலையுயர்ந்த ரத்தினமாலை அணிந்தபோதிலும் மற்ற அணிகளை நீக்கி யாழையே சிறந்த ஆபரணமாக மதித்துத் தரித்திருப்பவள் என்

பது தாரிணீ, ஹாரிணீ என்ற பதங்களிலிருந்து வெளியாகிறது. தாரிணீ தரித்திருப்பவள். ஹாரிணீ நீக்குபவள்.

कदम्बवनशालया कुचभरोल्लसन्मालया
कुचोपमितशैलया गुरुकृपालसद्वेलया ।
मदारुणकपोलया मधुरगीतवाचालया
कयापि घननीलया कवचिता वयं लीलया ॥ ३ ॥

கதம்பவநசாலயா குசபரோல்லஸந்மாலயா
குசோபமிதசைலயா குருக்ருபாலஸத்வேலயா ।
மதாருணகபோலயா மதுரகீதவாசாலயா
கயாபி கநநீலயா கவசிதா வயம் லீலயா ॥ 3

कदम्बवनशालया - கதம்ப வனத்தை இருப்பிடமாகக் கொண்டதும், कुचभरोल्लसन्मालया - பருத்த கொங்கைகளின் மேல் விளங்கும் ஹாரத்தை யுடையதும், कुचोपमितशैलया - கொங்கைகளால் மலையைப் போன்றதும், गुरुकृपालसद्वेलया - கருணை மிகுதிக்குக் கரையாக விளங்குவதும், मदारुणकपोलया – மதத்தால் சிவந்த கன்னங்களையுடையதும், मधुरगीतवाचालया - இனிமையான கீதத்தை மொழியாகக் கொண்டதும், घननीलया - மேகம்போல் கரியதாக விளங்குவதுமான, कयाऽपि - முக்கரணங்களுக்குமெட்டாத, लीलया-(மனத்தைக் கவருகின்ற) லீலா விசேஷத்தால், वयं - நாம், कवचिताः - கவசமணிந்தவர்களாக்கப்பட்டோம்.

கருத்து :—கதம்பவனத்தை வீடாகக் கொண்டவளும், மலையை ஒத்த கொங்கைகளின் பாரத்தில் மாலையணிந்தவளும், கருணைக் கடலின் கரையாகி விளங்குபவளும், சிவந்த கன்னங்களால் பிரகாசிப்பவளும்,

மெய்ம்மறந்து இனிய மொழி பாட்டுகளால் ஆனந்திப்பவளும், மேகம் போன்றவளுமான ஒரு லீலாவிபூதியால் நாம் கவசமணிந்தவர்கள் போலக் காப்பாற்றப் பட்டு வருகிறோம்.

குறிப்பு:—மலையில் அருவிபோல மலையைப் போன்ற கொங்கைகளில் மாலை அமைந்துள்ளது. கடம்பவனச் சோலையில் கொங்கை மலைகள் அமையப் பெற்றிருப்பதும் தகுந்ததே. குருவின் ப்ரஸாதத்தாலேதான் கருணைக்கடலை அடைய முடியும் என்பதும், தக்ஷிணாமூர்த்தி உருவத்துடன் விளங்கும் பரமசிவனது கருணைக் கடலுக்குத் திரிபுரஸுந்தரி தேவி கரையாக விளங்குகிறாள் என்பதும் தெளிவு. மாதக த்ரவியங்களை உபயோகித்துக் கன்னங்களில் சிவந்த நிறம் ஏற்பட்ட பிறகே இனிமையான சங்கீதங்கள் உற்பத்தியாகும் என்ற இயற்கை வெளியாகிறது. மேகம் போல நீல வர்ணமுள்ள திருமேனி கொண்ட தேவியை இரும்புக் கவசமாக நிரூபணம் செய்வது நிறத்திலும் குணத்திலும் பொருத்தமுள்ளது. கவசம் பூண்டவர்கள் யுத்தரங்கத்தில் அம்புகளின் வீழ்ச்சியால் காயமடையாமல் காக்கப்படுவார்கள். அவ்வாறே லீலைகளாக அவதரித்த தேவியின் கருணையால் துஷ்டர்களின் தொந்தரவு நீங்கப்பெற்றுக் காக்கப்படுகிறோம்.

कदम्बवनमध्यगां कनकमण्डलोपस्थितां
षडम्बुरुहवासिनीं सततसिद्धसौदामिनीम् ।
विडम्बितजपारुचिं विकचचन्द्रचूडामणिं
त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीमाश्रये ॥ ४ ॥

கதம்பவநமத்யகாம் கநகமண்டலோபஸ்திதாம்
ஷடம்புருஹவாஸிநீம் ஸததஸித்தஸௌதாமிநீம் |
விடம்பிதஜபாருசிம் விகசசந்த்ரசூடாமணிம்
த்ரிலோசநகுடும்பிநீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே || 4

कदम्बवनमध्यगां - கதம்ப வனத்தின் நடுவை அடைந்தவளும், कनकमण्डलोपस्थितां - ஸ்வர்ணமயமான சூரிய மண்டலத்தில் தோற்றம் பெற்றவளும், षडम्बुरुहवासिनीं - மூலாதாரம் முதலான ஆறு கமலங்களில் (சக்ரங்களில்) வாசம் பெற்றவளும், सतत - सिद्धसौदामिनीं - யோகிகளுக்கு நிலைபெற்ற மின்னலொளியாக விளங்குபவளும், विडम्बितजपारुचिं - செம்பருத்தியின் காந்தியை யொத்தவளும், विकचचन्द्रचूडामणिं - ஒளிர்கின்ற சந்திரகலையைத் தலையணியாக அணிந்தவளும், त्रिलोचनकुटुम्बिनीं - பரமசிவனுடைய க்ருஹிணியுமான, त्रिपुरसुन्दरीं - த்ரிபுரஸுந்தரியை, आश्रये - சரண மடைகின்றேன்.

கருத்து :—பூமியில் கடம்பக் காட்டின் நடுவில் வசிப்பவளும், ஆகாயத்தில் சூரிய மண்டலத்தின் நடுவில் யோகிகளால் தியானிக்கப்படுபவளும், மூலாதாரம் முதலிய ஆறு தாமரை போன்ற சக்கரங்களில் சரீரத்தில் தோன்றுபவளும், உண்மையில் சுத்த ஸத்வ ப்ரதானமாய் மின்னல் கொடி போல நிர்மலமாக இருப்பவளும், ரஜோ குணத்தின் சேர்க்கையால் செம்பருத்தியின் சிவந்த நிறம் பெற்றவளும், சந்திர கலையைச் சேகரமாக அணிந்து உலகங்களைக் களிக்கச் செய்கின்றவளுமான த்ரிபுரஸுந்தரியை வணங்குகிறேன்.

குறிப்பு:—தேவி ஆத்யாத்மிகத்தில் நமது தேகத்திலேயே மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், ஆஜ்ஞா, விசுத்தி என்ற ஷட்கமல சக்ரங்களில் வசித்துக்கொண்டும், ஆதிதைவிகத்தில் ஸ்வர்ணமயமான பாநுமண்டலத்தில் வசித்துக்கொண்டும் பக்தர்களுக்கு அருள் புரிகிருள். சித்தர்களான யோகிகளுக்கு மின்னல் கொடிபோல இருதய கமலத் தியான காலத்தில் தோன்றுகிருள். பிரவிருத்தி மார்க்கத்தைக் கைக்கொண்ட கர்மிகளுக்கு ரஜோகுண

சம்பந்தத்தால் சிவந்த உருவமாகத் தோன்றுகிருள். மின்னல் சஞ்சலமானது, 'தேவியோ (ஸித்த ஸௌ தாமிநீ) நித்தியமான் அழிவற்ற மின்னல் கொடி என்று வ்யதிரேக அணியும் விளங்கும். சந்திரசேகரரான பரமசிவனையும் ஒளிபெறச் செய்கிருள் என்ருல் த்ரிபுரஸுந்தரி தேவியின் ஒளி மகிமை எவ்வாறு இருக்க வேண்டும்?

कुचाश्रितविपश्चिकां कुटिलकुन्तलालङ्कृतां
कुशेशयनिवासिनीं कुटिलचित्तविद्वेषिणीम् ।
मदारुणविलोचनां मनसिजारिसंमोहिनीं
मतङ्गमुनिकन्यकां मधुरभाषिणीमाश्रये ॥ ५ ॥

குசாஞ்சிதவிபஞ்சிகாம் குடிலகுந்தலாலங்க்ருதாம்
குசேசயநிவாஸிநீம் குடிலசித்தவித்வேஷிணீம் |
மதாருணவிலோசநாம் மநஸிஜாரிஸம்மோஹிநீம்
மதங்கமுநிகந்யகாம் மதுரபாஷிணீமாச்ரயே || 5

कुचाश्रितविपश्चिकां - கொங்கைதனில் அணைக்கப்பட்ட யாழையுடையவளும், कुटिलकुन्तलालंकृतां- சுருண்ட குழல்களால் எழில் பெற்றவளும், कुशेशयनिवासिनीं—தாமரையில் அமர்பவளும், कुटिलचित्तविद्वेषिणीं- வஞ்சக எண்ணத்தை விசேஷமாக வெறுப்பவளும், मदारुणविलोचनां - மதத்தால் சிவந்த கண்களையுடையவளும், मनसिजारिसंमोहिनीं - மாரனை எரித்த சிவனையும் மயங்கச் செய்பவளும், मधुरभाषिणीं – இனிமையான மொழி வாய்ந்தவளுமான, मतङ्गमुनिकन्यकां - மதங்க முனிவரின் புதல்வியை (திரிபுரஸுந்தரியை) आश्रये – அடைக்கலம் புகுகிறேன்.

கருத்து:—சிரஸில் சுருண்ட குழல்களால் எழில் பெற்றிருப்பவளும் மார்பில் அணைக்கப்பட்ட வீணையால் விளங்குபவளும், மிருதுவான தாமரையில் அமர்ந்து கொண்டு மிருதுவான இருதய கமலம் படைத்தவர்களிடம் அன்பு காட்டுகிறவளும், மதத்தால் சிவந்த கண்களின் பார்வையால் மதனனை அழித்த ஈசனையும் நன்கு மயக்குகிறவளும், இனிமையாகப் பேசும் இயற்கையுள்ளவளும், மதங்க முனிவரின் புதல்வியுமான த்ரிபுரஸுந்தரி தேவியைப் பணிகிறேன்.

स्मरप्रथमपुष्पिणीं रुधिरबिन्दुनीलाम्बरां
गृहीतमधुपात्रिकां मधुविघूर्णनेत्राञ्चलाम् ।
घनस्तनभरोन्नतां गलितचूलिकां श्यामलां
त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीमाश्रये ॥ ६ ॥

ஸ்மரப்ரதமபுஷ்பிணீம் ருதிரபிந்துநீலாம்பராம்
க்ருஹீதமதுபாத்ரிகாம் மதுவிகூர்ணநேத்ராஞ்சலாம் ।
கநஸ்தநபரோந்நதாம் கலிதசூலிகாம் ச்யாமலாம்
த்ரிலோசநகுடும்பிநீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே ॥ 6

स्मरप्रथमपुष्पिणीं - மதனனது பாணங்களுள் முதலான அரவிந்தத்தைக் கையிலேந்தியவளும், रुधिरबिन्दुनीलाम्बरां—சிவப்புப் புள்ளிகள் நிரம்பிய கரிய ஆடை தரித்தவளும். गृहीतमधुपात्रिकां-மது பாத்திரத்தைக் கையில் கொண்டவளும், मधुविघूर्णनेत्राञ्चलां—மதுவை அருந்தியதால், சுழலுகின்ற கண்ணோரங்களையுடையவளும், घनस्तनभरोन्नतां-பருத்த கொங்கைகளின் பாரத்தால் (சிறிது) நிமிர்ந்தவளும், गलितचूलिकां-தொங்குகிற பின்னலையுடையவளும், श्यामलां—கரிய மேனியை உடையவளும் (ச்யாமளா தேவியும்), त्रिलोचनकुटुम्बिनीं- பரமேச்வரனது மனையாளுமான, त्रिपुरसुन्दरीं—த்ரிபுரஸுந்தரியை, आश्रये-சரணமடைகிறேன்.

கருத்து:—அரவிந்த பாணமேந்தி, சிவப்புப் புள்ளி நிரம்பிய கரிய மதுரைச் சுங்குடி ஆடைதரித்து மதுபாத்திரத்தைக் கையில் கொண்டு, மதுவை அருந்தி, தானும் சுழன்று, உலகங்களையும் சுழற்றுகிறவளும், நெருக்கமான கொங்கை பாரங்களால் நிமிர்ந்தவளும், தொங்கும் வேணீ பந்தமுடையவளுமான த்ரிபுரஸுந்தரியைச் சரணமடைகிறேன்.

குறிப்பு:—ச்யாமளா தேவியின் ஸ்வரூபம் இங்கு வர்ணிக்கப்பட்டுள்ளது.

* सकुङ्कुमविलेपनाम् अलकचुम्बिकस्तूरिकां
समन्दहसितेक्षणां सशरचापपाशाङ्कुशाम् ।
अशेषजनमोहिनीम् अरुणमाल्यभूषाम्बरां
जपाकुसुमभासुरां जपविधौ स्मराम्यम्बिकाम् ॥ ७ ॥

ஸகுங்குமவிலேபநாம் அலகசும்பிகஸ்தூரிகாம்
ஸமந்தஹஸிதேக்ஷணாம் ஸசரசாபபாசாங்குசாம் ।
அசேஷஜநமோஹிநீம் அருணமால்யபூஷாம்பராம்
ஜபாகுஸுமபாஸுராம் ஜபவிதௌ ஸ்மராம்யம்பிகாம் ॥ 7

**सकुङ्कुमविलेपनां** - குங்குமப்பூக் கலந்த சந்தனப் பூச்சு உடையவளும், **अलकचुम्बिकस्तूरिकां** - வகிட்டில் (**अलिक** என்றும் பாடம்; நெற்றியில் என்று பொருள்.) கஸ்தூரி அணிந்தவளும், அல்லது கஸ்தூரியைத் தொடுகின்ற அளகத்தையுடையவளும், **समन्दहसितेक्षणां**-புன்னகை பொருந்திய பார்வை வாய்ந்தவளும், **सशरचापपाशाङ्कुशां** - கணை, வில், கயிறு, அங்குசம்

---

* ஸ்ரீ மஹா த்ரிபுரஸுந்தரி மந்த்ரத்தை ஜபிப்பவர்களுக்கு இது த்யான ச்லோகமாகக் கொள்ளத்தக்கது.

என்ற ஆயுதங்களைத் தரித்தவளும், अशेषजनमोहिनी- ஜனங்களனைவரையும் மாயைக்குட்படுத்துபவளும், अरुणमाल्यभूषाम्बराम् - ஆரத்திலும், அணியிலும் ஆடையிலும் செம்மை வாய்ந்தவளும், जपाकुसुमभासुरां-செம்பருத்திப் பூவைப் போல் பிரகாசிப்பவளுமான, अम्बिकां - உலகத்து அன்னையை, जपविधौ - ஜபகார்யத்தில், स्मरामि - தியானிக்கின்றேன்.

கருத்து:—குங்குமப்பூக் கலந்த சந்தனம் பூசிக்கொண்டு, நெற்றியிலும் வகிட்டிலும் கஸ்தூரிப் பொட்டுத் தரித்து, சதுர்புஜங்களிலும் கணை, வில், கயிறு, அங்குசம் என்ற நான்கு ஆயுதங்களைத் தாங்கி, மாலை, நகை, ஆடைகளில் சிவந்த நிறமுள்ளவளாய், மந்தஹாஸத்துடன் அபாங்கத்தால் சற்று நோக்கி, ஜனங்களனைவரையும் மாயாவலையில் சிக்கச் செய்யும் தாயை ஜபகாலத்தில் நினைக்க வேண்டும்.

குறிப்பு:—பிரவிருத்தி மார்க்கத்துக்குத் தகுந்த ரஜோகுணம் நிரம்பியவளாய், பூச்சு, மாலை, நகை, ஆடை, பொட்டு முதலிய யாவற்றிலும் செம்மை நிறம் வாய்ந்தவளாக த்ரிபுரஸுந்தரீ தேவியை ஜப காலத்தில் தியானிக்க வேண்டும். துஷ்டநிக்ரஹத்தின் பொருட்டு நான்கு கைகளிலும் நான்கு ஆயுதம் தரித்தவளாகவும் தியானிக்க வேண்டும். அநுக்கிரகம் செய்யும் காலத்தில் மந்தஹாஸத்துடன் கடைக்கண் நோக்கைச் செலுத்துகிறவளாகவும் தியானிக்க வேண்டும்.

पुरन्दरपुरन्ध्रिकाचिकुरबन्धसैरन्ध्रिकां
पितामहपतिव्रतापटुपटीरचर्चारताम् ।
मुकुन्दरमणीमणीलसदलंक्रियाकारिणीं
भजामि भुवनाम्बिकां सुरवधूटिकाचेटिकाम् ॥ ८ ॥

புரந்தரபுரந்த்ரிகாசிகுரபந்தஸைரந்த்ரிகாம்
பிதாமஹபதிவ்ரதாபடுபடீரசர்ச்சாரதாம் |
முகுந்தரமணீமணீலஸதலங்க்ரியாகாரிணீம்
பஜாமி புவநாம்பிகாம் ஸுரவதூடிகாசேடிகாம் || 8

**पुरन्दरपुरन्ध्रिका** - தேவமாதர்களை, **चिकुरबन्धसैरन्ध्रिकां**-கூந்தலை ஒன்று சேர்த்துப் பின்னல் புரியும் தொழில் செய்பவர்களாக உடையவளும், **पितामहपतिव्रता**-பிரமனின் மனைவியான கலைமகளை, **पटुपटीरचर्चारतां**-தேர்ச்சி பெற்ற சந்தனம் பூசுகிறவளாக உடையவளும், **मुकुन्दरमणी** - விஷ்ணுவின் மனைவியான லக்ஷ்மியை, **मणिलसदलंक्रियाकारिणीं**-அணிகளை அமைத்து அலங்கரிக்கும் காரியத்தில் ஈடுபட்டவளாகக் கொண்டவளும், **सुरवधूटिकाचेटिकां** - தேவ மாதர்களைத் தொண்டு புரிபவர்களாகக் கொண்டவளுமான, **भुवनाम्बिकाम्** - லோக மாதாவை, **भजामि** - பணிகின்றேன்.

கருத்து :—கூந்தலைச் சேர்த்து வாரிப் பின்னலாக்கிக் கொண்டும், நல்ல மணம் பொருந்திய பூச்சுப் பூசிக்கொண்டும், ரத்தின பூஷணங்கள் அணிந்து விளங்கும் உத்தம மாதர்கள், சேடிப்பெண்களால் சூழப்படுவார்கள். த்ரிபுரஸுந்தரியின் கூந்தலைச் சேர்த்து அழகுபடுத்துவார்கள், இந்திரலோகத்து மாதர்களான அப்ஸரப் பெண்கள். வாஸனைப் பூச்சுப் பூசுபவள் பிரம்மனின் மனைவியான ஸரஸ்வதி தேவி, ரத்தினாபரணங்களால் அழகுபடுத்துபவள் விஷ்ணுவின் மனைவியான லக்ஷ்மிதேவி. பணிவிடை செய்யக் காத்திருக்கும் சேடிகளாகச் சூழ்ந்து நிற்கிறார்கள் தேவ கன்னிகைகள். இவ்விதம் ஸகல உலகுக்கும் தாயான த்ரிபுரஸுந்தரி தேவியை நான் ஸேவித்துச் சரணமடைகிறேன்.

குறிப்பு :—தந்தைக்கும் தந்தையான பிதாமஹரின் பதிவிரதை சந்தனம் பூசுவதால் சந்தான பாக்கியமும் பாதிவ்ரத்ய மகிமையும் நிரம்பியவள் என்றும், ரத்னா கரத்திலுதித்த மகாலக்ஷ்மி அணிகளை அமைப்பதால் ரத்தினமயமான பூஷணங்கள் அபரிமிதமானவை என்றும், த்ரிபுரஸுந்தரிக்குச் சேடியாக இருந்த பாக்கியத்தால் தேவமாதர்களானார்கள் என்றும் கொள்க.

श्रीत्रिपुरसुन्दरीस्तोत्रं समाप्तम् ॥

*ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ ஸ்தோத்ரம் ஸமாப்தம்*

**ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ ஸ்தோத்ரம் முற்றிற்று**

॥ शुभम् ॥

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

## ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

### சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

ரூ. பை.

1. ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—60
2. ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... 0—60
3. ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... 0—25
4. ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்கிருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... 2—50
5. ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... .... 0—87
6. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... 2—50
7. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்கிருதத்தில் .... .... 0—40
8. —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... .... 0—30
9. ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—87
10. விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... 0—75
11. ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—75
12. மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—62
13. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது 1—75
14. ஸ்ரீ துர்கா சந்த்ர கலாஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... 0—50
15. ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... .... 0—75

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1

லிபர்ட்டி அச்சகம், சென்னை-1